


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

## நீ சினந்தால்....

நிலமகளே நின்பொறுமை யுயர்ந்த தென்பார்
நீசினந்தால் இவ்வையம் பொறுப்ப தாமோ?

எண்ணரிய பெருஞ்செல்வம் கொண்டுதிகழ் கின்றாய்
எழுதரிய சிறப்போடு நின்றுமகிழ் கின்றாய்
மண்ணகத்து மக்கள்பலர் மனந்திரிந்த தாலோ
மனம்வெம்பிப் பேய்ச்சிரிப்பு நீகாட்டத் துணிந்தாய்?

நிலமகளே நின்பொறுமை யுயர்ந்த தென்பார்
நீசினந்தால் இவ்வையம் பொறுப்ப தாமோ?

நல்லவர்கள் தீமையினைக் கண்டுமனம் நாணி
நடுங்கிடுவர் என்பார்கள்; அதைப்போல நீயும்
எல்லாமுந் தனக்கென்னும் பொல்லாரைக் கண்டு
இதயந்தான் நாணிமிக நடுங்கினையோ ஐயோ!

நிலமகளே நின்பொறுமை யுயர்ந்த தென்பார்
நீசினந்தால் இவ்வையம் பொறுப்ப தாமோ?

மற்றவரின் பெருந்துன்பம் கண்டுமனம் நோவா
மாபாவி சிலர்போல, குழந்தையெலாம் கதறப்
பெற்றவர்கள் உளம்பதறி உடல்பதறி நிற்கப்
பெருநிலமே நீசிரிக்க மனம்வந்த தேயோ?

நிலமகளே நின்பொறுமை யுயர்ந்த தென்பார்
நீசினந்தால் இவ்வையம் பொறுப்ப தாமோ?

நான்பெரியன் நானுயர்ந்தோன் என்கின்ற பொல்லா
நச்சகந்தை கொண்டிந்த நானிலத்திற் பல்லோர்
தான்றோன்றித் தனமாகத் திரிவதனைக் கண்டோ
தாங்காமல் மனம்வெம்பி மூச்சுயிர்த்தாய் நீயும்

நிலமகளே நின்பொறுமை யுயர்ந்த தென்பார்
நீசினந்தால் இவ்வையம் பொறுப்ப தாமோ?

— *சாமி பழனியப்பன்*

## வாழ்வுக்கு வழி

**முதலமைச்சர் காமராஜ்**

"பலகோடி மக்கள் பட்டினியால் வாட ஒரு சிலர் மட்டும் எப்போதும் உல்லாசமாக வாழ்ந்து கொண்டிருக்க வேண்டும் என்று எண்ணுவது மிகவும் பிற்போக்கானது. பட்டினியால் அவதியுறுவோர்க்கு வேளைக்குவேளை உணவு கிடைக்க வழி செய்யவேண்டும்.

"பணம் படைத்தவர்கள் தமது பழையஎண்ணங்களை மறந்து ஏழை மக்களுக்கு உதவும் பணியில் ஈடுபட வேண்டும். அப்போதுதான் அரசாங்கம் செய்கின்ற நல்ல பல திட்டங்களைக் குறைகூறும் எண்ணம் ஏற்படாமலிருக்கும்.

"வாழ்க்கையில் பெறத்தக்க வசதிகளை யெல்லாம் பெற்றவர்களே மேலும் மேலும் தங்கள் நிலையை உயர்த்திக்கொள்ள எண்ணுவார்களானல் காலப்போக்கில் இல்லார்க்கும் செல்வர்க்கும் உள்ள இணைப்பு அறுந்தேபோகும். அதன் பின் விளைவு என்ன என்பதை நீங்களே தெரிந்து கொள்ளலாம். அத்தகையதொரு விளைவு ஏற்படாமல் தடுக்கப் பெரும் பெரும் போராட்டங்கள் தேவையில்லை. நாட்டின் வளத்தை நல்லபடியாகப் பயன் படுத்தத் திட்டமிட்டுப் பணியாற்றினல் போதும். எல்லோருக்கும் அடிப்படைத் தேவையான உணவு, உடை, வீடு, கல்வி எல்லாம் கிடைக்க வழி ஏற்படும். அதன் பின் எல்லோருமே இன்பமாக வாழலாம்"

இவ்வாறு முதலமைச்சர் காமராஜ் அவர்கள் சென்னை சட்டக் கல்லூரிச் சமூக சேவைப் பிரிவின் ஆண்டு நிறைவு விழாக் கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

அறிவியல்

நோயாளியின் உடம்பில் எவருடைய இரத்தத்தை வேண்டுமானாலும் பாய்ச்சலாமா? குழந்தையின் உண்மையான தந்தை யார்? - என்பன போன்ற பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பது எப்படி? கட்டுரையைப் படியுங்கள்.

— ஆசிரியர்.

# இரத்தத்தைப் பற்றிய ரசமான செய்திகள்

எழுதியவர் : – பேச்சிமுத்து M. A.

இரத்தக் குழாய்கள் வழியாக நம் உடலில் ஓடும் குருதி சிவப்பு நிறமுள்ள ஒரு திரவம்; இதயம் சுருங்கி விரிவதால் இரத்த ஓட்டம் ஏற்படுகிறது ; இளம் மஞ்சள் நிறமான பிளாஸ்மாவும், அதில் மிதக்கின்ற வெள்ளை, சிவப்பு நிற அணுக்களும் இரத்தத்தின் பகுதிப் பொருள்கள் என்பன போன்ற பல விஷயங்கள், அறிவியல் பயிலும் உயர்நிலைப்பள்ளி மாணவனுக்குக் கூடத் தெரியும். இவற்றைத்தவிர இரத்தத்தைப் பற்றிய பல விஷயங்கள் நம்மில் பலருக்கே தெரியாது என்பதிலே கருத்துவேறுபாடு இருக்கமுடியாது.

உதாரணமாக, இரத்ததானம் என்பதைப்பற்றி அடிக்கடி கேள்விப்படுகிறோம். இதைப்பற்றி நமக்கு எவ்வளவு தெரியும்? நம் உடலில் போதுமான அளவு இரத்தம் இருக்கவேண்டும். பெரிய ஆபரேஷன்கள் செய்யும் போதும், பலத்த காயங்களாலும் உடலிலிருந்து பெருமளவில் இரத்தம் வெளியேறி விடலாம். இத்தகைய சேதம் சில சமயங்களில் நோயாளியின் உயிருக்கே ஆபத்தை விளைவிக்கலாம். அப்போது, வேறு ஒருவரின் இரத்தத்தை எடுத்து நோயாளியின் உடலுக்குள் செலுத்துகிறார்கள். இதை நாம் "இரத்தம் பாய்ச்சுதல்" (Blood Transfusion) என்றும் கூறலாம். யாருடைய இரத்தத்தை வேண்டுமானாலும் நோயாளிக்குக் கொடுத்துவிட இயலாது. இரத்தம் பாய்ச்சுமுன், நோயாளியின் (Recipient) இரத்தத்தையும், யாரிடமிருந்து இரத்தம் எடுக்கப்படுகிறதோ அவரது (Donor) இரத்தத்தையும் சரியாகச் சோதனை செய்தபிறகு தான் இரத்தம் பாய்ச்சுவதைப் பற்றி முடிவு செய்கிறார்கள். இத்தகைய சோதனைகள் என் செய்ய வேண்டும்? அதுவே ஒரு பெரிய கதை!

சென்ற நூற்றாண்டில் மருத்துவர்கள், எல்லோருடைய உடலிலும் ஒரே வகையான இரத்தம் தான் ஓடுகிறது என்று கருதினர். எனவே, ஒருவனுக்கு இரத்தம் தேவைப்பட்ட போது, வேறு யாரிடமிருந்து வேண்டுமானாலும் இரத்தத்தை எடுத்து நோயாளியின் இரத்தக் குழாய்களில் பாய்ச்சினர். இவ்வகையான சிகிச்சையால் சில நோயாளிகள் பிழைத்தனர்; பலருக்கு இந்தச் சிகிச்சையே ஆபத்தாக முடிந்தது. ஒரே சிகிச்சையால் எதிர்மாறான இரண்டு வகையான பலன்கள் ஏற்படுவதன் காரணத்தை அவர்களால் அறிந்து கொள்ள இயலவில்லை, அது புதிராகவே இருந்தது.

கார்ல் லாண்ட்ஸ்டீனர் (Karl Landstesner) என்பவர் வியன்னாவைச் சேர்ந்த ஆஸ்திரிய விஞ்ஞானி. சென்ற நூற்றாண்டின் இறுதியில், செய்த இடையறாத ஆராச்சியின் பயனாக அவர் புரியாத புதிருக்கு விடை கண்டு, 1900-ல் வெளியிட்டார். இரத்தத்தை உறைந்து போகாமல் நீண்ட காலத்துக்குச் சேமித்துவைக்கும் முறையைக்கண்டு பிடித்ததும் அவர்தான். இரத்தம் பாய்ச்சுதலில் ஏற்பட்ட சிக்கலை விலக்கிய அவருடைய கண்டுபிடிப்பிற்காக 1930-ல் அவருக்கு நோபல் பரிசு வழங்கப் பெற்றது.

இரத்தத்தை அடிப்படையாக வைத்து மனிதர்களை நான்கு வகையாக லாண்ட்ஸ்டீனர் பிரித்தார். A, B, AB; O என்ற நான்கு வகையான இரத்தப் பிரிவுகள் (Blood Groups) உள்ளன. A என்ற பிரிவைச் சேர்ந்தவரது உடலுக்குள் A பிரிவு இரத்தம் பாய்ச்சலாம்; B பிரிவு இரத்தத்தைப் பாய்ச்சினால் A யும் B யும் கலப்பதால் இரத்தம் உறைந்துபோய் நோயாளி இறக்க நேரிடும். ஆனால் O பிரிவு இரத்தத்தை எல்லாவகையான மனிதர்களுக்கும் பாய்ச்சலாம். AB பிரிவைச் சேர்ந்தவருக்கு எப்பிரிவையும் சேர்ந்த இரத்தத்தைப் பாய்ச்சலாம். இதைப்போல, குறிப்பிட்ட இரத்தப் பிரிவைச் சேர்ந்தவருக்கு இன்ன பிரிவு இரத்தம்தான் கொடுக்கப் படவேண்டும் என்கின்ற நியதி இருக்கிறது. மருத்துவர்கள் அதன்படிதான் இரத்தம் பாய்ச்சுகிறார்கள்.

இரத்தம் பாய்ச்சுவதற்கு மட்டும்தான் இரத்தப்பிரிவு பற்றிய விவரங்கள் உதவுகின்றன என எண்ணலாகாது. மேலை நாட்டில் குழந்தைகளின் பிறப்பில் ஐயப்படுகின்ற சில வழக்குகள் நீதி மன்றத்துக்கு வருவது இயல்பாகிவிட்டது. குறிப்பிட்ட குழந்தை தனக்குப் பிறக்கவில்லை என்று வழக்காடுவார் ஒருவர்; தன்மனைவி நடத்தை தவறியவள் என்பது அவருடைய கட்சி. இது ஒரு சிக்கலான வழக்கு. நீதிபதி சட்டத்தைத் துணைக்கழைப்பதில் பயனேதும் இல்லை; அதற்கு மாறாக அவர் அறிவியலின் துணையை நாடுகிறார். அதன் மூலம் உண்மையை அறிந்து தீர்ப்பளிக்கிறார்.

சம்பந்தப்பட்ட தந்தை, தாய், குழந்தை மூவரின் இரத்தப் பிரிவுகளையும் கண்டுபிடிக்கிறார்கள். தாய் A பிரிவைச் சேர்ந்தவள் என்று வைத்துக் கொள்வோம். தந்தை O பிரிவைச் சேர்ந்தவனானால், குழந்தை A அல்லது O பிரிவாகத்தான் இருக்கவேண்டும். குழந்தையின் இரத்தம் B பிரிவைச் சேர்ந்ததாக இருந்தால் O பிரிவைச் சேர்ந்தவர் உண்மையான தந்தை அல்லர். குழந்தை வேறு ஒருவருக்குத்தான் பிறந்திருக்கிறது. மேற்கண்ட முடிவின்படி கணவனின் கட்சி வென்றுவிடும். மனைவி நடத்தை தவறியவள் ஆவாள். இவ்விதமாக இரத்தப் பிரிவுகளால் குழந்தைகளின் உண்மையான பெற்றோரை அறிந்து கொள்ள முடிகிறது.

இது தவிர மருத்துவ மனைகளில் பிறக்கும் குழந்தைகள் சில சமயங்களில் எதிர்பாராத விதமாக மாறினாலும், மாற்றப்பட்டாலும் இந்தச் சோதனையால் எளிதில்

**இலக்கிய உலகம்**

'கற்றறிந்தார் ஏத்தும் கலி' — என்று சிறப்பித்துப் பேசப்படுகின்ற கலித்தொகை, காதல் எண்ணங்கள் மலரும் இன்பச்சோலை. அச்சோலையில் மலர்ந்த எழில்மலர் தரும் இன்ப மணத்தை இங்கே சிறிது நுகரலாம்.

# சொல்ல நீ வல்லாயோ

- பழம் -

நாளுக்கு நாள் அவள் மேனியிலே ஏதோ வேறுபாடு; சற்று மெலிவாகவே காணப்பட்டாள். அது மட்டுமல்ல — இப்போது அவள் குணங்கள், செயல்கள் எல்லாமே சிறிது வேறுபட்டுத்தான் தோன்றின. ஏதேனும் கேள்வி கேட்டால் எதுவுமே பதில் சொல்லாமல் அமைதியாக எதையோ பார்ப்பதுபோல் பார்த்துக் கொண்டிருப்பாள். முன்புபோல், எவரோடும் சிரித்துக் கலகலவென்று பேசுவது கிடையாது. மாறாகச் சிடு சிடு என்று பேசுவாள் சில நேரம். தாய்க்கோ, தன் மகளின் இந்த உடல் வேறுபாட்டுக்கும், உள்ளத்தின் மாறுபாட்டுக்கும் காரணம் புரியவில்லை. ஏதேனும் தெய்வக் கோளாறோ, பிசாசுக் குணமோ என்றெல்லாம் குழம்பினார்கள் எல்லோருமே.

குறி சொல்லும் குறத்தி வந்தாள். நோயின் காரணத்தையும், அதைத் தீர்க்கும் மருந்தையும் அறிந்து கூறுமாறு கேட்டார்கள். 'வெறியாட்டு' நடத்தினார்கள். இப்படியே என்னென்னவோ. என்றாலும் என்ன? நோயின் காரணம் மட்டும் புரியவில்லை.

ஒரே மகள்—அன்பாக அருமையாக வளர்க்கப்பட்டவள். அவளுக்கு இந்த நிலை என்றால் 'தாயுள்ளம்' படும் பாட்டைக்கேட்கவா வேண்டும். 'பெற்ற மனம்' பித்து என்பார்கள். ஆனாலும் ...ள்ளை மனம்' கல்லாக ...க்கும் [illegible]

மகள் முனகிக்கொண்டே சட்டென எழுந்தாள். அவள் பக்கத்து வீட்டுத் தோழி அப்போதுதான் அவளைப் பார்க்க உள்ளே நுழைந்தாள். இருவருமாக வீட்டுப் பின்புறமுள்ள தோட்டத்தினுள் சென்றார்கள். பார்க்க வந்தவள் வாய்பார்த்தாள். 'அவள்' பேசினாள்:

"ஆமா, என் அம்மாவும் பிறருமாகச் சேர்ந்து ஏன் இப்படி அலங்கோலப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள் இந்த வீட்டை?"

"எல்லாம் உன்னாலேதான்"—தோழி சொன்னாள்.

"உனக்குத் தெரியாது. எல்லாம் அவர்கள்தான்."

"அப்படியா? சரி."

"இதோ பார். நடந்தவற்றையெல்லாம் தெளிவாகச் சொல்லுகிறேன். அப்புறம் நீயே தெரிந்துகொள்வாய் யார் தவறு செய்தவர்கள் என்பதை."

இப்படிச் சொல்லிவிட்டுத் தொடர்ந்து பேசினாள்:

"அன்றொரு நாள்......

'நீர் இல்லாமல் மலரிலே நிறம் மட்டும் நிற்கும்படியாகக் கொடியிலும் கொம்பிலும் மலர்கின்ற மலரின் வடிவமாகப் பொற்கொல்லன் தன் உலையிலிட்டுக் காய்ச்சித் திருத்தமுறச் செய்த பொன் மலர் மாலையையும், வளையல்கள் கழன்று விழாதபடி கட்டுவடம் அணிந்த கையை

தோள்களையும் உடையவளே! நான் உன்னிடத்தே பேரன்பு கொண்டு உன் பாதங்களின் கீழ் வாழுதற்கு நீ அருள் புரிய மாட்டாயா? அவ்வாறு அருள் புரியாமலிருப்பது பொருத்தமாகுமா?'

"என்று கேட்டுக் கொண்டே, மகரமீன் வடிவத்திலே செய்த தலைச்சிட்டி — தலைக் கோலம் அணிந்த எனது கூந்தலில் சூடியிருந்த மலர்மாலைகளில் ஒரு வட்டத்தைத் தனது விரல் நுனியில் சுற்றி மோந்து பார்த்தான்; நறவ மலர்போலக் காட்சியளிக்கும் விரல்களையுடைய எனது கையைப் பிடித்துத் தனது கண்களிலே ஒற்றிக்கொண்டான். கொல்லன் உலைக் கூடத்திலே துருத்தி காற்றொலி கிளப்புவதுபோல ஒரு மூச்சு விட்டாள். தான் விரும்புகின்ற பெண் யானையைத் துதிக் கையால் தடவிக் கொடுக்கும் ஆண் யானை போல, தொய்யில் எழுதப்பட்ட எனது இளம் நகில்களை மெல்லத் தடவிக் கொடுத்து எனக்கு இன்ப போதையை ஊட்டினான். இத்தகைய செயல்களால் எனது தளர்ச்சியைப் போக்கி உள்ளக் கிளர்ச்சி உண்டாக்கினான். எனவே அவனும் நானும்............"

"வெள்ளத்தோடு வெள்ளம்போல இணைந்து கலந்துவிட்டீர்கள். அப்படித்தானே? பிரமாதம், அப்புறம்?"

"பார்த்தாயா? பார்த்தாயா? கேலி பேசத் துவங்கிவிட்டாயே,"

"ஐயோ! நான் கேலி பேசுகிறேனா?"

"இல்லை உள்ளதைத்தான் பேசுகிறாய். சரி, பரவாயில்லை. கேள்: அப்புறமென்ன, 'திருமணம்தான் மிச்சம்'. அன்பே! அது தடையின்றி நடைபெறுமானால் நான் வாழ்வேன். அதற்குரிய வழிவகைகளை உன்னோடு ஆராய்ந்து தெரிந்து கொள்ள விரும்புகிறேன். அதற்கு நீ துணை புரிய வேண்டும். நீ என் மீது இரக்கம் கொண்டு, துணை செய்வதானால், 'அருள் உள்ளங்கொண்டு இவள் இத்தகைய அருஞ் செயலைச்செய்தாள்; ஒருத்தியின் கற்பு நெறி வாழத் துணை புரிந்தாள்' என்ற புகழ் உனக்கு இந்த உலகில் என்றும் நிலைத்து நிற்கும். எனது இன்ப வாழ்க்கைக்கு ஒரு வழி சொல்லமாட்டாயா?"

இவ்வாறு அன்போடு கெஞ்சிக் கேட்டாள். அவ்வாறு அவள் கெஞ்சியதைச் செஞ்சொல் ஓவியமாக நமக்குப் படம் பிடித்துக் காட்டும் பாடலைப் பார்ப்போம் :-

"கொடியவும் கோட்டவும் நீரின்றி நிறம்பெறப்
படிஅழல் புறந்தந்த பூவாப்பூம் பொலன்கோதைத்
தொடிசெறி யாப்பமை அரிமுன்கை அணைத்தோளாய்!
அடியுறை அருளாமை ஒத்ததோ நினக்கு? என்ன
நரந்தம்நா றிருங்கூந்தல் எஞ்சாது நனிபற்றிப்
பொலம்புனை மகரவாய் நுங்கிய சிகழிகை
நலம்பெறச் சுற்றிய குரலமை ஒருகாழ்
விரல்முறை சுற்றி மோக்கலும் மோந்தனன்;
நறாஅவிழ்ந் தன்னஎன் மெல்விரற் போது கொண்டு
செறாஅச் செங்கண் புதைய வைத்துப்
பறாஅக் குருகின் உயிர்த்தலும் உயிர்த்தனன்;
தொய்யில் இளநகில் இனியதை வந்து
தொய்யலம் தடக்கையின் வீழ்பிடி அளிக்கும்
மையல் யானையின் மருட்டலும் மருட்டினன்;
அதனால்
அல்லல் களைந்தனன்; தோழி! நம்நகர்
அருங்கடி நீவாமை கூறின் நன்றென
நின்னொடு சூழ்வல் தோழி! நயம்புரிந்து
'இன்னது செய்தாள் இவள்' என
மன்னா உலகத்து மன்னுவது புரையமே"

# இந்தியா வந்த வெளிநாட்டு விருந்தினர்



1959-ம் ஆண்டில் இந்தியாவுக்கு வந்த வெளிநாட்டுப் பிரமுகர்களும் அவர்கள் கலந்து கொண்ட நிகழ்ச்சிகளும் பற்றிய தகவல்களைத் தெரிவிக்கும் படமே மேலே காணப்படுவது. விவரம் பின்வருமாறு:

மேல் வரிசை: (இடது பக்கம்): ஆஸ்திரேலிய பிரதம மந்திரி டாக்டர் ஆர். ஜி. மென்ஸிஸ் இந்தியப் பிரதம மந்திரியுடன் பேசுகிறார். (வலது பக்கம்): பூட்டான் பிரதம மந்திரி, பி. ஜிக்மி டோர்ஜி ராஷ்டிரபதியுடன் பேசுகிறார்.

நடு வரிசை: (இடது பக்கம்): கிழக்கு ஜெர்மன் பிரதம மந்திரி, மி. கரோட்வோல், பாலம் விமான நிலையத்தில் வரவேற்கப்படுகிறார். (நடுப்பக்கம்): மங்கோலிய மக்கள் குடியரசு அமைச்சரவைத் தலைவர் மி. யும்ஜாகின் ஸெடன்பால் பங்களூர் ஹிந்துஸ்தான் விமானத் தொழிற்சாலையைப் பார்வையிடுகிறார். (வலது பக்கம்): கானா பிரதம மந்திரி, பம்பாய் ஆரே பால் பண்ணையைச் சுற்றிப் பார்க்கிறார்.

கீழ் வரிசை: (இடது பக்கம்): சுவீடன் பிரதம மந்திரி பி. எர்லாண்டர் உலக விவசாயக் கண்காட்சியில் "இன்றைய இந்தியா" பகுதிக்கு விஜயம் செய்கிறார். (வலது பக்கம்): ஆப்கனிஸ்தான் பிரதம மந்திரி, சர்தார் முகம்மது டாவுட் புது டில்லியிலுள்ள ஒக்லா தொழிற்சாலையைப் பார்வையிடுகிறார்.

## சென்னை மாநில மேல்சபைத்தேர்தல்

சென்னை மேல்சபைக்கு மொத்தம் 18 அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்; அவர்களில் ஏழு பேர் ஏப்ரல் 8-ந் தேதி சென்னை சட்டசபை அங்கத்தினர்களாலும், 11 பேர் ஏப்ரல் 11-ந் தேதி ஐந்து தொகுதிகளாலும் தேர்தெடுக்கப்படவிருக்கின்றனர்.

சென்னை (பட்டதாரிகள்) தொகுதி, சென்னை (ஆசிரியர்கள்) தொகுதி, தென் ஆர்காடு-தஞ்சாவூர்-திருச்சிராப்பள்ளி (ஸ்தல ஸ்தாபனங்கள்) தொகுதி ஆகியவை ஒவ்வொன்றும் இரண்டு அங்கத்தினர்களையும், சென்னை-செங்கற்பட்டு-வடஆர்காடு (ஸ்தல ஸ்தாபனங்கள்) தொகுதி நான்கு அங்கத்தினர்களையும், மதுரை-ராமநாதபுரம்-திருநெல்வேலி—கன்னியாகுமரி (ஸ்தல ஸ்தாபனங்கள்) தொகுதி ஒரு அங்கத்தினரையும் தேர்ந்தெடுக்கும்.

ராஜ்ய சட்டசபை அங்கத்தினர்களால் நடத்தப்படவிருக்கும் தேர்தலுக்கு அபேட்சாப் பத்திரங்கள் தாக்கல் செய்வதற்கான கடைசித் தேதி மார்ச் 21. பரிசிலனைத் தேதி மார்ச் 23. அபேட்சைகளை வாபஸ் பெறுவது மார்ச் 26-ந் தேதி வரை அனுமதிக்கப்படும். இதர தொகுதிகளுக்கு அபேட்சாப் பத்திரம் வாபஸ் பெறுவதற்கான கடைசித்தேதி—மார்ச் 21.

இத் தேர்தல்களில் ஒரு அபேட்சகர் 250 ரூபாய் ஜாமீன் தொகை கட்ட வேண்டும்; ஒரு ஷெடியூல் வகுப்பு அல்லது ஷெடியூல் குடியைச் சேர்ந்த ஒரு அபேட்சகர் 125 ரூபாய் மட்டுமே ஜாமீன் தொகை கட்ட வேண்டும்.

## தபால் நிலையம் திறப்புவிழா

லால்குடி தாலூகாவைச்சேர்ந்த [illegible]றுகாப்பூர் கிராமத்தில் புதிதாக ஒரு தபால் நிலையம் திறக்கப்பெற்றது. கரியமாணிக்கம் பஞ்சாயத்துத் தலைவர் திரு. கோ. ராசமாணிக்கம் அனைவரையும் வரவேற்றுப் [illegible] பெரி

# திருச்சிச் செய்திகள்

## பஞ்சாயத்துத் தலைவர்கள் பொதுச்சபை

திருச்சி தாலுகா பஞ்சாயத்துத் தலைவர்கள் பொதுச்சபைக் கூட்டம் திருச்சி மங்கம்மாள் ஹாலில், ராஜ்ய பஞ்சாயத்துக்கள் யூனியன் தலைவர் திரு. கே. ராஜாராம் தலைமையில் நடைபெற்றது. உணவு உற்பத்திப் பெருக்கத்திற்குத் தீவிர சிரத்தை எடுத்து அரசாங்கத்தோடு ஒத்துழைக்குமாறு கலெக்டர் திரு. குலாம்முகமத் பாத்ஷா கேட்டுக் கொண்டார்.

பஞ்சாயத்துச் செய்தி ஆசிரியர் திரு. கே. கோவிந்தராஜு ராஜ்ய பஞ்சாயத்துக்கள் யூனியன் காரியதரிசி திரு. ஆர். விஸ்வநாதன், பூவாளூர் பஞ்சாயத்து போர்டு தலைவர் திரு. கோவிந்தராஜன் ஆகியோர் பேசியபின், தாலூகா பஞ்சாயத்துச் சங்கத் தலைவர் திரு. பரமசிவம் பிள்ளை நன்றி கூறக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## செயிண்ட் ஜோசப் கல்லூரி சங்கம்

திருச்சி செயிண்ட் ஜோசப் கல்லூரி சங்கங்களின் ஆண்டு விழா, இந்து உதவி ஆசிரியர் திரு. ஏ. கோவிந்தராஜன் தலைமையில் நடைபெற்றது. திருமதி. கோவிந்தராஜன் பரிசுகள் வழங்கினர்.

ரெவரண்ட் எல். எம். பாலன் எல்லோரையும் வரவேற்றுப் பேசினர். பேராசிரியர் இருதயசாமி அனைவர்க்கும் நன்றி கூறினர்.

## த. நா. டைப் அடிப்பவர் சங்கம்

தமிழ்நாடு அரசாங்க டைப் அடிப்பவர்கள் சங்க திருச்சி கிளைக்கூட்டம் சங்க நிர்வாகிகளைத் தேர்ந்தெடுப்பதற்காக நடத்திய கூட்டத்தில் புதிய ஆண்டுக்கு திரு. பி. பாலசுப்பிரமணியம் தலைவராகவும், திரு. கே. ராம... டி. கே. நடராசன் செயலாளராகவும், திரு. எஸ். திருஞானம் உதவிச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## தூதுக்குழு அனுப்புக

உறையூர், காஜாபெட், கண்டோன்மெண்டுப் பகுதி ஆகிய இடங்களில் தண்ணீர்த் தொட்டிகள் நிர்மாணிப்பது குறித்து மேற்கொண்டு செய்யவேண்டிய செயல் முறைகளைப் பற்றிக் கலந்து பேசுவதற்காக ஒரு தூதுக் குழு அனுப்புமாறு சென்னை மாநில ரெவினியூ மந்திரி திரு. மாணிக்கவேலர் தந்தி மூலம் அறிவித்திருப்பதாகத் தெரிகிறது.

## சேரி ஒழிப்பு திருச்சிக்கு 51 லட்சம்

சென்னை ராஜ்ய முனிசிபல் லோக்கல் போர்டு இன்ஸ்பெக்டர் வேலூர் நகரசபைக்கு அனுப்பியுள்ள ஓர் அறிக்கையில், சேரிகளின் புதிய குடியிருப்புத் திட்டம் நகரமைப்பு டைரக்டரால் அங்கீகரிக்கப்பட்டுவிட்டது என்றும், இத்திட்டம் விரைவில் செயல்படுத்தப்படுவதற்கு நகரசபைகள் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுமாறும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இத்திட்டத்தின்படி திருச்சிக்கு ஐந்து லட்சத்துப் பத்தாயிரத்து இருநூற்றைம்பது ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்தால் 473 குடும்பங்கள் பயனடையும் என்றும் கூறப்பட்டுள்ளது.



## மனைவி பேரால் செய்யும் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ்

மணமான பெண்களின் சொத்து விஷயம் பற்றிய 1874-ம் வருஷத்தியச் சட்டம், சில திருத்தங்களுடன், முன்னர் "பி" பிரிவில் அடங்கியிருந்த ராஜ்யங்களுக்கும், மற்றும் மணிப்பூருக்கும் இப்பொழுது விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது.

இதற்குச் சட்டபூர்வயாக வகை செய்கிற "மணமான பெண்கள் சொத்து பற்றிய 1959-ம் வருஷத்திய விஸ்தரிப்புச் சட்டம்" 1960 மார்ச் முதல் தேதி அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது.

மணமான ஒருவர் தன்னுடைய மனைவி அல்லது குழந்தைகளின் நலனுக்காகத் தன்னுடைய பெயரில் எடுத்துக்கொள்கிற ஆயுள் இன்ஷூரன்ஸ் பாலிசிகள் அச்சட்டத்தின்படி அவர்களுடைய நலனுக்காகப் பொறுப்பு ஏற்படுத்தப்பட்ட ஒரு "டிரஸ்ட்" சொத்து ஆகும். எனவே, கடன் கொடுத்தவர்கள் அதில் எத்தகைய பாத்தியதையும் கோரமுடியாது. மற்றும் அது, சம்பந்தப்பட்ட நபரின் "எஸ்டேட்டில்" ஒரு பகுதியாகவும் இடம் பெறாது.

இன்ஷூரன்ஸ் பாலிசியின் கீழ்ச் சேரவேண்டிய தொகைகள் 1953-ம் வருஷத்திய சொத்து வரிச் சட்டத்தின் கீழ், வரிவிதிப்பு விஷயத்தில், சம்பந்தப்பட்ட நபருடைய வேறு எந்தச் சொத்துடனும் சேர்க்கப்படாமல் தனிச் சொத்தாகவே பாவிக்கப்படும்.




ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே.

ஒலி 25 ] 20-3-1960 [ வாரம் 20

# தூயவை துணிந்த பின்பு...

இந்திய மக்களின் விடுதலைக்கு உழைத்து வெற்றி கண்ட புனித ஸ்தாபனம் காங்கிரஸ். அரசியல் விடுதலை பெற்றுத் தந்த அந்த ஸ்தாபனம் இன்று இந்நாட்டு மக்களின் புதுவாழ்வுக்கு அரும்பாடுபட்டு வருகிறது. இதற்கிடையே ஏமாற்றத்தாலும், சபல எண்ணத்தாலும் காங்கிரஸைக் கவிழ்த்து ஒழித்துவிடும் திருப்பணியில் மிகத் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர் சிலர்.

காங்கிரஸ் எதிர்ப்பாளர்கள் தாங்கள் காங்கிரஸை எதிர்ப்பதற்குக் கூறுகின்ற காரணங்களில் உண்மை இருக்கிறதா என்பதை நாம் ஆராய்ந்து பார்த்தால், மக்கள் மனத்தைக் குழப்பிவிட்டு இலாப வேட்டையாடவே அவர்கள் இவ்வாறு கிளம்பியிருக்கிறார்கள் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்.

எதிர்ப்பாளர்கள் கூறுகிறபடி காங்கிரஸில் சில ஊழல் இருப்பதாகவே விவாதத்திற்காக நாம் ஒத்துக் கொண்டாலும், களை முளைத்திருக்கிறது என்பதற்காகப் பயிரையே நாசம் செய்வது புத்திசாலித்தனமாகுமா? வீட்டிலே மூட்டைப்பூச்சி இருக்கிறது என்பதற்காக வீட்டையே நெருப்பு வைத்து அழிப்பது அறிவுடைமையாகுமா? களையை அகற்ற வேண்டும்; மூட்டைப் பூச்சியை அழிக்கவேண்டும். அதுதான் விவேகமான செயல். எதிர்ப்பாளர்களோ பயிரை அழிப்பதும், வீட்டை எரிப்பதுமே பரிகாரம் என்கிறார்கள்.

அண்மையில், செங்கற்பட்டு மாவட்ட காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் பேசிய சென்னை முதலமைச்சர் திரு. காமராஜ் அவர்கள்,

“அடுத்த பொதுத் தேர்தலில் கம்யூனிஸ்டுகள், தி. மு. க., சுதந்திரக் கட்சி இம் மூன்றும் கூட்டுச் சேர்ந்து காங்கிரசை எதிர்க்க இருக்கின்றன; சர்க்காருக்கு எதிராக அவர்கள் காட்டும் ஒழுங்கீனக் குற்றச்சாட்டு மக்கள் மனத்தைக் குழப்புவதற்காக அவர்கள் சிருஷ்டிக்கும் பூச்சாண்டியே. அதில் உண்மை இருக்குமானால், குறிப்பிட்ட ஒழுங்கீனங்களைச் சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவரட்டும் என்று சவால் விடுகிறேன்”

என்று அறைகூவல் விடுத்திருக்கிறார். இதுதான் அரசியல் முறையும் நாணயமும் ஆகும். எதிர்ப்பாளர்கள் என்ன செய்யப்போகிறார்கள் என்று பார்க்கலாம். அதற்கிடையில், காங்கிரஸ் ஸ்தாபனத்தை நாம் வலுவுடையதாக ஆக்கிக்கொள்ளும் பெரும்பணியில் ஈடுபடுவது மிகவும் அவசரமும் அவசியமும் ஆகும். ஸ்தாபனத்தை வலுவுடையதாக ஆக்குவதற்கு நாம் என்ன செய்ய வேண்டும் என்பதையும் அன்றையக் கூட்டத்தில் திரு. காமராஜ் குறிப்பிட்டிருக்கிறார். அதாவது, காங்கிரஸ் அங்கத்தினர் அனைவரும் வீடுவீடாகச்சென்று, தம்மால் முடிந்த அளவு அதிகமான அங்கத்தினர்களைக் காங்கிரசில் சேர்க்கவேண்டும் என்பதுதான் திரு. காமராஜ் அவர்களின் கட்டளை. நாட்டு நலன் கருதி, நாம் அந்தக் கட்டளையை ஏற்றுத் துணிந்து பணியாற்றுவோம். தூயவை துணிந்த பின்பு பழி[illegible] இல்லை.

## ஜகத்குரு வருகை

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு சங்கராசார்ய ஸ்வாமிகளின் வருகைபற்றிய ஸ்ரீமுகம் திருச்சி மக்களால் வரவேற்கப்பட்டது. ஜகத்குரு மார்ச் 26-ல் எழுந்தருளுகிறார். அருட் செங்கோலோச்சும் ஆசார்ய ஸ்வாமிகளுக்கு நமது பக்தி நிறைந்த வரவேற்புக்களை அறிவித்துக் கொள்வதுடன், அவர்களின் வருகைக்குரிய ஏற்பாடுகளை மேற்கொண்டுள்ள அன்பர்களைப் பாராட்டுகிறோம்.



## அமெரிக்க செயற்கைக் கிரகம்

பூமியிலிருந்து 8½லட்சம் மைல் தூரத்தில் சூரியனைச் சுற்றிக்கொண்டிருக்கும் அமெரிக்க 5-வது பயனீர் செயற்கை கிரகத்திடமிருந்து ஜோட்ரல் பாங்கிக்குத் தெளிவான குறிப்புகள் வந்துகொண்டிருக்கின்றன. 5 கோடி மைல் தூரத்தில் உள்ள சுக்கிரனில் இந்தச் செயற்கை கிரகம் சுற்றும்போதும்கூட குறிப்புகள் கிடைக்கும் என்று ஜோட்ரெல் பாங்கி நம்புகிறது.

## விவசாயத்திற்கு அணு சக்தி

அணுசக்தியை விவசாய அபிவிருத்திக்குப் பயன்படுத்தும் யோசனை அரசாங்கத்துக்கு உண்டு. இது சம்பந்தமாக கோயமுத்தூர் விவசாய ஆராய்ச்சி நிலயத்தில் ஒரு ஆராய்ச்சிப் பகுதியை ஏற்படுத்துவது பற்றி யோசிக்கப்பட்டு வருகிறது என்று அசெம்பிளியில் விவசாய அமைச்சர் திரு. பக்தவத்சலம் கூறினர்.

## அமெரிக்கா செல்ல விரும்பும் மாணவர்கள்

“1960-ம் ஆண்டின் இலையுதிர் காலத்தில் தொடங்கும் வகுப்புக்களில் சேர்ந்து படிப்பதற்காக அமெரிக்கா செல்ல விரும்பும் வைத்திய மாணவர்களும், அமெரிக்க ஆஸ்பத்திரியில் தங்கி வேலை பார்க்கப் பரிவர்த்தனைத் திட்டத்தின்கீழ்ச் செல்பவர்களும் குறைந்தபட்சம் மூன்றுவாரக் காலத்துக்கு முன்னதாகவே அனுமதி (விஸா) கோரி மனுச் செய்யவேண்டும்; அப்படியானல்தான் தூதரகம் சரியான முறையில் உதவ முடியும்” என்று அமெரிக்கத் தூதரக அதிகாரி ஒருவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறுகிறார்.

“16 வயதான பின்பு இந்தியாவுக்கு வெளியில் ஆறு மாதங்களுக்கு மேலாகத் தங்கியுள்ள மாணவர்களாயின் அவர்கள் குறைந்தபட்சம் எட்டு வாரங்களுக்கு முன்னதாகவே மனுச்செய்யவேண்டும்” என்றும் அவ்வதிகாரி கூறுகிறார்.

# விஞ்ஞான முன்னேற்றத்தால் கலை உணர்வு குறைகிறதா?

வளர்ந்து வரும் விஞ்ஞான உலகைக்கண்டு, விஞ்ஞானம் இந்நிலையில் வளர்ந்துகொண்டே போனால் கலையுணர்வு குறைந்து, அழிவே பெருகும் என்று சிலர் கருதிப் பேசுகின்றனர். ஆனால், உண்மையில் கலையுணர்வு குறையுமா? அழிவே பெருகுமா என்பனவற்றையெல்லாம் ஆராய்கிறார் இக்கட்டுரையாளர் லின்பூல்.

விஞ்ஞானம், தொழில் நுட்பம் ஆகிய துறைகளில் இக்காலத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்கள் பண்பாட்டைப் பாழாக்குகின்றன. என்று சிலர் கருதுகின்றனர். அவை இலக்கியம், வரலாறு, தத்துவம் முதலியவற்றை மக்கள் புறக்கணிக்கச் செய்கின்றன என்றும் அவர்கள் அஞ்சுகின்றனர். இவ்வாறு கருதுவது சரியா? பண்பாட்டையும் பண்பாட்டுக் கலைகளையும் விஞ்ஞானமும் தொழில் நுட்பமும் அழிக்கின்றன என்று கூறுவது பொருந்துமா?

இவ்வாறு கூறுவது உண்மைக்குச் சிறிதும் பொருந்தாது என்று கூறுகிறார் பேராசிரியர் ஜார்ஜ் போவாஸ். அவர் புகழ்பெற்ற கலை விமர்சகர், சிறந்த தத்துவக் கலைஞர். 'நமது சமுதாயத்தின் தொழில் நுட்ப அமைப்பு சமுதாயத்தின் பண்பாட்டு ஆர்வத்தைச் சிறிதும் பாதிக்கவில்லை'' என்று தத்துவம் முதலிய பண்பாட்டுக் கலைகள் பற்றிய சர்வதேசக் கவுன்ஸிலில் அவர் அண்மையில் கூறினார். 1920ம் ஆண்டு முதல் இன்று வரை சென்ற 40 ஆண்டுகளாக ஓவியமும், கட்டிடக் கலையும், இலக்கியமும் அடைந்துள்ள வளர்ச்சி இதற்குமுன் எக்காலத்திலும் காணப்பட்டதில்லை என்று டாக்டர் போவால் குறிப்பிட்டார்.

நாடு தொழில் மயமாகி வருகிறதெனினும் மக்களின் கலை உணர்வு குறையவில்லை; விஞ்ஞானத்தில் பொதுமக்களுக்கு ஆர்வம் மிகுந்து வருகிறதெனினும் இலக்கியம், விரிவுரைகள், கண்காட்சி ஆகியவற்றிலும் விருப்பம் அதிகமாகி வருகிறது என்று கூறி, டாக்டர் போவாஸ் அவற்றிற்குச் சான்றுகள் காட்டினார்.

ரேடியோ வந்தவுடன் பண்பாடே அழிந்துவிடும் என்று பலர் ... கம்பெனிகள் ஒலித்தட்டுகள் விலையாகமாட்டா என்று அஞ்சின. இசைக் கருவிகள் செய்வோர் தம் தொழிலுக்கு ஆபத்து வந்தது என்று எண்ணினர். இன்று அவ்வித ஐயங்கெள்ல்லாம் அகன்று விட்டன. சிறந்த இன்னிசை இன்று ஒலிபரப்பப்படுகிறது.

பழங்காலத்து இசையையும்பல்லாயிரக்கணக்கான மக்கள் கேட்கின்றனர். இளைஞர் எதிர்காலத்தில் இன்னிசை நிபுணராக விளங்கி, ரேடியோ இசை நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளும் பொருட்டு இசைக்கருவிகள் வாங்குகின்றனர்; இசை பயில்கின்றனர். இளம் எழுத்தாளர் ரேடியோநாடகங்கள் எழுதுகின்றனர். ரேடியோ பொதுமக்களுக்கு பண்பாட்டு ஆர்வம் ஊட்டியுள்ளது.

எந்த நாட்டிலும் அமெரிக்காவில் உள்ளவை போன்ற இசைக் குழுக்கள் இல்லை. விரிவுரைகள் அமெரிக்காவில் அதிகமாக நடைபெறுகின்றன; ஆராய்ச்சி அரங்குகளும் நடைபெறுகின்றன.

டெலிவிஷன் வந்ததும் ஒரு வகை அச்சம் ஏற்பட்டது. புத்தகம் படிப்போர் தொகை குறைந்துவிடும் என்று சிலர் கருதினர்.

ஆனால் உண்மையில் புத்தகங்கள் ஏராளமாக வெளியிடப்படுகின்றன. நூலகங்களில் புத்தகங்கள் இரவலாகப் பெற்றுப் படிப்பவர் தொகையும் கூடியிருக்கிறது.

தொழில் நுட்பம், விஞ்ஞானம் ஆகியவற்றில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் பண்பாட்டுத் துறை முன்னேற்றத்தைச் சிறிதும் குறைக்கவில்லை என்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

★

படித்துச் சொல்லுகிறோம்

## சோலை நிழல்

ஆசிரியர்: இளம்பாரதி
விற்பனையுரிமை: ஸ்டார் பிரசுரம்
மேலக்கோபுரத் தெரு, மதுரை.

செம்மைப்பட்ட உள்ளத்தினின்றும் எழவேண்டும் – செஞ்சொல் ஓவியமாகத் திகழவேண்டும். கற்பனை மெருகோடு உண்மை ஒளி பெருகிப் பாயவேண்டும். எளிமை வேண்டும்-பிறர் உள்ளத்தைக் கவியச் செய்யும் இனிமைவேண்டும்.

மேலே கூறிய இவ்வளவும் ஒருங்கே அமைந்த ஒரு பாமாலைத் தொகுப்பே, இளம்பாரதியின் 'சோலை நிழல்.'

கவிதையின் கருட்பொருளாகக் கூடகோபுரங்களும் மாடமாளிகைகளுமேதாம் இருக்க வேண்டும் என்பதில்லை. குப்பை கூளமும் இருக்கலாம்- மண் குடிசையும் இருக்கலாம். ஆம்.

இருமருங்கும் சோலை நிழல்
எழுப்புகின்ற நீடுவழி
தருகின்ற இன்பநிலைச்
சார்பாகி இயற்கைத்தாய்
உருவாக்கும் பேரெழிலின்
உயிர்முதலாய் மிகஇழிந்த
தெருப்புழுதி அத்தனையும்
செழுங்கவியின் கருப்
(பொருட்கள்

என்று (பக்கம். 71) பாடுகிறார் இளம்பாரதி. இத்தகைய 'சமநோக்கு' கவியுள்ளம் கொண்டாருக்கன்றி பிறருக்கு இருக்க முடியாது.

'தமிழென்றால் நலிவென்று
சொன்ன கூட்டம்
தலைகவிழ்ந்து நலிவுற்ற
கோலம் கண்டோம்.'

என்று வெற்றிப் பாதையிலே வீரநடை போடுகிறார்.

புலவனைப் போற்றாநாடு
புகழணி கொள்வதில்லை.'

என மகாகவிபாரதியாரைப்பற்றிப் பாடும்போது இளம்பாரதி குறிப்பிடும் வரிகளையே நாமும் கூறி, வாழ்த்துக்கு உரிய இளங்கவிஞரைப் பாராட்டுகிறோம்.

## அறிவிப்பு

அடுத்த வார சிவாஜி இதழ் புதிய பல பகுதிகளோடும், புதிய அமைப்போடும் வெளிவரும் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறோம். – ஆசிரியர்

## எப்படி எழுதுவது

### என் – எனது

இவ்விரு சொற்களும் ஒரே பொருளை உணர்த்துவனவே ஆயினும் இச் சொற்களை அடுத்து வரும் சொல் உயர்திணையானால் என் என்ற சொல்லையும், அஃறிணையாக இருக்குமானால் எனது என்ற சொல்லையும் பயன் படுத்துவதே சரியானது. எடுத்துக்காட்டாக, என் மகன்–எனது சொத்து என்பனவற்றைக் குறிப்பிடலாம்.

### ஒரு – ஓர்

இவ்விரண்டு சொற்களும் ஒரு பொருளைக் குறிப்பனவே. ஆனாலும், இச்சொற்களை அடுத்து வரும் சொல் உயிரெழுத்தில் ஆரம்பிக்குமானால் ஓர் என்ற சொல்லையும், உயிர் மெய்யெழுத்தில் ஆரம்பிக்குமானால் ஒரு என்ற சொல்லையும் பயன்படுத்துவதே சரியான மரபாகும். எடுத்துக்காட்டாக, – ஒரு பெண் – ஓர் ஆடவன் என்பவற்றை கொள்ளலாம்

வேர்க்கடலை ஓர் எளிய உணவுப் பொருள். ஆனால், அதில் எவ்வளவு சத்துக்கள் அடங்கியிருக்கின்றன என்பதைப் பார்க்கும்போது நமக்கு வியப்பாகவே இருக்கும். வேர்க்கடலையிலிருந்து பாலும், தயிரும் கூடக் கிடைக்கிறது. ஆம். படித்துப் பாருங்கள்.

— ஆசிரியர்.

# வேர்க்கடலையும் அதன் பயனும்

வேர்க்கடலைகளில் சுமார் 50 வகைகள் இருக்கின்றன. அவை பெரும்பாலும் ஆந்திரா, பம்பாய், சென்னை, சௌராஷ்டிரா, மைசூர் ஆகிய பகுதிகளில் சாகுபடியாகின்றன. அவைகளில் ஓரளவு ஏற்றுமதி செய்யப்படுகிறது.

அதன் மகசூல், ரகத்தையும், சாகுபடி முறையையும் பொறுத்து இருக்கிறது. "வானமாரி" சாகுபடியில் கொத்துக் கொத்தாகக் காய்க்கிற வேர்க்கடலை ரகம் தோட்டோடு சேர்த்து 750 பவுண்டுக்கு அதிகமாகவும், படர்ந்து காய்க்கிற வேர்க்கடலை 1000 பவுண்டுக்கு அதிகமாகவும் பாசன வசதியுடன் கூடிய பயிர் விஷயத்தில் அது இரண்டாயிரம், இரண்டாயிரத்து ஐந்நூறு பவுண்டுக்கு அதிகமாகவும் கிடைக்கிறது.

வேர்க்கடலை பல வகையில் உபயோகப்படுகிறது. ஆனால், பிரதானமாக அது ஆகார உபயோக எண்ணெய் எடுப்பதற்குத்தான் உபயோகப்படுகிறது. ஆகாரத் தயாரிப்புக்களில் உபயோகப் படுத்தப்படுவதற்காக அதிலிருந்து மணமும் நிறமும் இல்லாத வனஸ்பதி தயாரிக்கப்படுகிறது. சுத்தம் செய்யப்படாத வேர்க்கடலை எண்ணெய் சோப்பு, கிளிசரின் ஆகியன தயாரிக்கப் பயன் படுத்தப் படுகிறது.

எண்ணெய் பிழிந்த பிண்ணாக்கு கால்நடைத் தீவனமாகவும் உரமாகவும் உபயோகப்படுகிறது. ஆனால் சிறந்த முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, தோடும் தோலும் நீக்கப்பட்ட கடலைப் பருப்பிலிருந்து எண்ணெய் எடுத்துக் கிடைக்கிற பிண்ணாக்கு தரத்தில் உயர்ந்ததாக இருப்பதால் மனித உணவுக்கும் ஏற்றதாக இருக்கும்.

குறைந்த அளவு கொழுப்புச் சத்துள்ள வேர்க்கடலை மாவில் ப்ரோட்டீன்களும் "பி" ரக வைட்டமின் சத்துக்களும், கால்சியம் பாஸ்பரஸ் கனிப்பொருள் சத்துக்களும் இருக்கின்றன; அதனால் அதைச் சத்துநிறைந்த உணவுப் பொருளாக ஆக்கலாம். மைசூர், மத்திய உணவுத் தொழில்நுட்ப ஆராய்ச்சி நிலையம் அந்தப் பொருள்களைக் கொண்டு உயர்ந்த ரக உணவு வகைகளைத் தயாரிக்கும் பல செய்முறைகளை உருவாக்கியிருக்கிறது.

அத்தகைய உணவு வகைகளில் ஒன்றான இந்திய பலகாரிய உணவில் 42 சதம் புரோட்டினும், ஏ, டி, பி 1, பி 2 ஆகிய வைட்டமின்களும், கால்சியம், இரும்பு ஆகிய சத்துக்களும் கலந்த உயர்ரக உப உணவாகும். அந்த உணவைத் தினமும் 1½, 2 அவுன்சுகள் உட்கொண்டால், தினசரித் தேவையான புரோட்டீன், வைட்டமின்கள், கனிச்சத்துக்கள் ஆகியவை கிடைக்கும்; அது குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் தேவைப்படுகிற வைட்டமின் சத்துக்களைக் கணிசமான அளவுக்குத்தருகிறது.

சாதாரண பிஸ்கோத்துகளில் காணப்படுகிற புரோட்டீன் சத்தை, விசேஷமாகத் தயாரிக்கப்பட்ட வேர்க்கடலை மாவைக் கலப்பதன் மூலம் கோதுமை மாவிலுள்ள சத்தைப்போல 30 சதவிகிதம் வரை பெறலாம். அதனால் 15 சதம், 16 சதம் புரோட்டினும் கிடைக்கும். சாதாரண பிஸ்கோத்துகளில் அவைகளின் அளவு 5 சதம் முதல் 6 சதம் வரை இருக்கும்.

மத்திய உணவுத் தொழில்நுட்ப ஆராய்ச்சி நிலையம் "புஷ்டிக் ஆட்டா" என்னும் ஒரு வித மாவுக் கலப்பை உருவாக்கியிருக்கிறது. (கோதுமை ஆட்டா 75 சதம் மரவள்ளிக் கிழங்கு மாவு 17 சதம் வேர்க்கடலை மாவு 8 சதம்.) அதை சப்பாத்தி, பூரி ஆகியவை தயாரிக்கப் பயன்படுத்தலாம். அதை உபயோகித்து வந்தால் மக்களுக்கு 25 சதம் உணவுச் சத்து அதிகப்படியாகக் கிடைக்கும்.

குறைந்த அளவு கொழுப்புச் சத்துள்ள வேர்க்கடலை மாவு, மரவள்ளிக் கிழங்கு மாவின் புரோட்டீன் சத்தை அதிகப்படுத்தும். மரவள்ளிக்கிழங்கு மாவில் வெறும் மாவுப்பொருள் அல்லது ஸ்டார்ச் சத்து அதிகமாக இருக்கிறது. அவையிரண்டையும் கோதுமை ரவையுடன் கலந்து, அரிசி போன்ற உணவுச் சத்துள்ள தானியங்களைத் தயாரிக்கலாம்; அதை நாம் விரும்புகிறபடி எந்த உருவத்திலும் தயாரிக்கலாம்.

வேர்க்கடலையிலிருந்து உயர்ந்த ரகத் தாவரப்பால், தாவரத் தயிர் தயாரிக்கலாம்; அந்தப் பால் பசும் பாலைப் போன்ற சத்து நிறைந்ததாக இருக்கும். அந்தத் தயிர் பெரும் அளவில் உபயோகிக்கப்பட்டு ஆராயப் பட்டிருக்கிறது; அது பார்வைக்குக் கவர்ச்சிகரமாகவும், எளிதில் ஜீரணிக்கக்கூடியதாகவும், ருசி மிகுந்ததாகவும் இருப்பதாகத் தெரிய வருகிறது; அது அரிசி உணவுடன் இணைத்துப் பயன்படுத்தக்கூடிய நல்ல உப உணவாகும்.



## பால் பண்ணைகள்

கிராம நல வளர்ச்சிப் பயிற்சி நிலையங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு பால் பண்ணை ஏற்படுத்தச் சென்னை அரசாங்கம் அனுமதி அளித்துள்ளது. இதன்படி முதலில், தஞ்சை மாவட்டம் ஆடுதுறை, பட்டுக்கோட்டை ஆகிய ஊர்களில் இரண்டும், நெல்லை மாவட்டம் கோயில்பட்டியில் ஒன்றும், சேலம் மாவட்டம் கிருஷ்ணகிரியில் ஒன்றும் ஆக நான்கு பண்ணைகள் ஏற்படுத்தப்படும். ஒவ்வொரு பண்ணைக்கும் முதலீட்டுச் செலவுக்காக இருபதாயிரத்துத் தொள்ளாயிரம் ரூபாவும், ஆண்டு ஒன்றுக்கு நடைமுறைச் செலவுகளுக்காக ரூபா ஏழாயிரமும் அனுமதிக்கப்பட்டுள்ளது.



## எவரெஸ்டுக்கு இந்தியர்குழு பயணம்

இந்தியர்களே எவரஸ்டு சிகரத்திற்கு ஏறும் முதல் முயற்சியின் முதற்படியாக கோஷ்டியின் தலைவர் பிரிகேடியர் கியான் சிங் விமானத்தில் 2ம் தேதி காட்மாண்டுக்குப் பயணமானார். மற்றவர்கள் அன்றிரவு ரயிலில் பிரயாணமானார்கள். கோஷ்டியில் 29 பேர் இருக்கின்றனர்.

இப்போதுள்ள திட்டத்தின்படி உலகிலேயே மிக உயரமான சிகரத்தில் ஏறும் முயற்சி ஏப்ரல் முதல் வாரத்தில் தொடங்கும். அதுவரை அவர்கள் நாம்சே பஜார் என்ற இடத்தில் தங்கியிருப்பார்கள். உயரமான இடத்தில் கடும்குளிருக்கு பழக்கப் படுத்திக்கொள்ளும் முறையில் அவர்கள் இவ்வாறு அங்கு தங்கியிருக்க திட்டமிட்டிருக்கிறார்கள்.

முற்றிலும் இந்தியர்களைக் கொண்ட கோஷ்டி எவரெஸ்டு சிகரத்திற்கு ஏறப்போவது இதுவே முதல்தடவையாகும்.

1953-ல் பிரிட்டிஷ் கோஷ்டி ஏறிற்று. அதிலுள்ள ஹிலாரியும், டென்சிங் என்ற இந்தியரும் முதல் தடவையாக எவரஸ்டுக்கு சிகரத்தை அடைந்தார்கள். அதன் பிறகு 1956-ல் சுவிட்ஜர்லாந்தைச் சேர்ந்த அல்பர்ட் எக்லர் என்பவர் எவரஸ்டு சிகரத்திற்குச் சென்றார்.

1953-ம் வருடம், பிரிட்டிஷ் கோஷ்டியார் சென்ற பாதையில் செல்வதுதான் இந்திய கோஷ்டியின் நோக்கமாகும்.

18,000 அடி உயரத்தில் முதல் முகம் அமைக்க திட்டமிட்டுள்ளனர். வழி நெடுகிலும் எட்டு அல்லது ஒன்பது முகாம்கள் அமைப்பார்கள். சிகரத்திற்கு இரண்டு அல்லது மூன்றுபேர் செல்வார்கள். கூடியவரை எல்லோருக்குமே சிகரத்திற்கு ஏற வாய்ப்பளிக்கப்படும்.

கோஷ்டியில் முக்கிய உறுப்பினர்கள் 13 பேர். இதில் ஆறு பேர் இராணுவ அதிகாரிகள் ஏழு பேர் சிவிலியன்கள். கோஷ்டியில் மிக இளையவர் 25 வயதான பிளைட் லெப்டினன்ட் சௌதிரியாகும். அவர்கள் எடுத்துச் செல்லும் கருவிகளில் 80 சதவிகிதம் இந்திய ராணுவத் தளவாட உற்பத்திச் சாலையில் உருவாக்கப்பட்டவைகளாகும்.

# குளித்தலை தாலுகா இளைஞர் காங்கிரஸ் முதலாவது மாநாடு

- மாடுகள் வாங்கவும் உரம் வாங்கவும், விவசாயிகள் விவசாயச் செலவுக்குக் கடன் பெறவும் அரசாங்கம் ஏற்பாடு செய்ய வேண்டும்.
- குளித்தலைக்கும் முசிறிக்கும் இடையே காவேரியில் பாலம் கட்ட வேண்டும் என்ற கோரிக்கையை நிறைவேற்ற வேண்டும்.
- விவசாயத் தேவைகளுக்கு மின்சார வசதி செய்து கொடுத்துப் புதிய பஸ் போக்கு வரத்து ஆரம்பிக்க வழிசெய்ய வேண்டும் –இவ்வாறு விவசாய நலன் கருதும் பல தீர்மானங்கள் நிறைவேறின.

குளித்தலை தாலுகா இளைஞர் காங்கிரஸ் முதலாவது மாநாடு மார்ச் 6–ந் தேதி காலை தண்ணீர்ப்பள்ளி தியாகி "குமரன் அரங்கில்" திரு. கே. ஏ. தர்மலிங்கம் தலைமையில் நடைபெற்றது. காலை 9 மணிக்கு குளித்தலை ரயில்வே ஸ்டேஷனிலிருந்து காளைகள் பூட்டிய ரதத்தில், தலைவர்கள் ஊர்வலமாக மாநாட்டுப் பந்தலுக்கு அழைத்துவரப்பட்டார்கள். ஊர்வலத்தில் சேவா தளத் தொண்டர்களும், மாநாட்டுப் பிரதிநிதிகளும், நூற்றுக் கணக்கான பொதுமக்களும் கலந்து கொண்டார்கள். காலை 10மணிக்கு மாநாட்டுப் பந்தலின் எதிரில் பொன்மலை திரு. வி. சம்பத் தேசியக் கொடியை ஏற்றிவைத்தார்.

வரவேற்புக் கமிட்டித் தலைவர் திரு. எஸ். பி. சுப்ரமண்யம் தலைவர்களை வரவேற்று உரை நிகழ்த்தினார். திருச்சி ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. டி. எஸ். அருணாசலம் மாநாட்டைத் துவக்கி வைத்தார். சென்னை ராஜ்ய மின்சாரத்துறை அமைச்சர் திரு. வி. ராமையா சிறப்புரை வழங்கினார். தலைவர் திரு. கே. ஏ. தர்மலிங்கம் தலைமையுரையில் மாநாட்டின் நோக்கங்களையும், இளைஞர்களின் எதிர்கால வேலைகளையும் விளக்கிக் கூறினார்.

காந்திஜி திருவுருவப்படத்தைப் புதுக்கோட்டை திருமதி பிருந்தா தேவியும், காமராஜ் திருவுருவப் படத்தை [illegible] முசிறி திருவுருவப்படத்தை கொடுமுடி நாராயணனும் திறந்து வைத்து உரை நிகழ்த்தினர். சென்னை திரு. சி.ஆர். தமிழ்மணி தற்கால அரசியல்நிலைமையை விளக்கிக்கூறினார்.

மாநாட்டில் 250-க்கு மேற்பட்ட பிரதிநிதிகளும், 200-க்கு அதிகமான ஆண்,பெண் பார்வையாளர்களும், ஜில்லா முழுவதும் உள்ள இளைஞர் காங்கிரஸ் ஊழியர்களும் வந்திருந்தனர். வரவேற்புக்கமிட்டிக்காரியதரிசி திரு. டி.என். குஞ்சரம் தலைவர்களுக்கும், பிரதிநிதிகளுக்கும் பார்வையாளர்களுக்கும் நன்றி கூறினார்.

கீழ்கண்ட தீர்மானங்கள் நிறைவேறின.

குளித்தலை தாலூகாவில் தற்போது அமைந்துள்ள இளைஞர் காங்கிரஸ் கமிட்டிகளின் பிரதிநிதிகளைக்கொண்டு தாலுகா இளைஞர் காங்கிரஸ்கமிட்.டியை அமைப்பது.

ஜில்லா தாலுகா வாரியாக இளைஞர் ஸ்தாபனங்களை அமைக்கவும், பிரச்சாரம் செய்யவும், திறமையும், அனுபவமும் உள்ள கன்வீனர்களை உடனடியாக நியமனம் செய்யவும் வேண்டுமென இம்மகாநாடு கேட்டுக்கொள்கிறது.

சொந்த நிலமற்ற குத்தகை வாரச் சாகுபடி செய்யும் விவசாயிகளைக் கட்டாயமாகக் கூட்டுறவுச் சங்கங்களில் அங்கத்தினர்களாகச் சேர்த்து அவர்களுக்கு மாடுகள் வாங்க, உரம் வாங்க, மற்றும் விவசாயச் செலவுகளுக்குக் கடன் பெற அரசாங்கம் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென மாநாடு கேட்டுக்கொள்கிறது.

குளித்தலைக்கும் முசிரிக்கும் இடையே காவேரியில் பாலம் கட்ட வேண்டுமென்ற அப்பகுதி மக்களின், ஸ்தாபனங்களின் கோரிக்கைகளை ஏற்றுக் கொண்டு மூன்றாவது ஐந்தாண்டுத்திட்டத்திலேயே நிறைவேற்றி வைக்க வேண்டுமென இம்மாநாடு கேட்டுக் கொள்கிறது.

குளித்தலை தாலுகாவில் பெருகமணியிலிருந்து நெய்தலூருக்கும், தோகைமலையிலிருந்து மைலம்பட்டி வழியாக குஜலியம் பாறைக்கும், பஞ்சப்பட்டியிலிருந்து மைலம்பட்டிக்கும், மகாதானபுரத்திலிருந்து மைலம்பட்டிக்கும் பஸ் போக்குவரத்து ஏற்படுத்திக் கொடுக்கவும், உட்புறக் கிராமங்களில் விவசாயத்தேவைகளுக்கு உடனடியாக மின்சார வசதி செய்கொடுக்கவும் வேண்டுமென அரசாங்கத்தை இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

# செய்திக் கோவை

## கைத்தறித் துணி ரிபேட் குறையாது

கைத்தறித் துணிக்குத் தற்போது கொடுக்கப்பட்டுவரும் ரிபேட் தொகையைக் குறைக்கும் உத்தேசமில்லை என்று மாநிலத் தொழிலமைச்சர் திரு. ஆர். வெங்கட்ராமன் சட்டசபையில் குறிப்பிட்டார். மத்திய அரசாங்கத்திடமிருந்து ரூ. 115 லட்சம் ரிபேட் தொகை வரவேண்டியிருப்பதால் அதை சங்கங்களுக்கு வழங்குவதில் சிறிது காலதாமதம் ஏற்பட்டிருப்பதாகவும் அவர் குறிப்பிட்டார்.

## கூட்டுறவுப் பண்ணைகள் அமைக்கக் கோரிக்கை

கூட்டுறவுப் பண்ணைகளை அமைக்கக் கோரி விவசாயிகளிடமிருந்து சர்க்காருக்கு விண்ணப்பங்கள் வந்திருப்பதாகத்தொழில் அமைச்சர் திரு. வெங்கட்ராமன் சட்டசபையில் கூறினார்.

கூட்டுறவு விவசாய முறைபற்றி தெரிந்துவர சீனம் சென்ற இந்தியத் தூதுக்குழுவின் அறிக்கையை மத்திய சர்க்கார் மாநில சர்க்காருக்கு அனுப்பியுள்ளதாகவும் 1959 மே மாதம் கூட்டுறவுப் பண்ணை முறைபற்றி பரிசீலித்த திரு. நிஜலிங்கப்பா தலைமையின் கீழ் கமிட்டி நியமிக்கப்பட்டிருப்பதாகவும் அந்தக் கமிட்டியின் அறிக்கையும் தற்போது கிடைத்துவிட்டதாகவும் அமைச்சர் தெரிவித்தார்.

## சென்னைக்கு அருகில் மோட்டார் தொழிற்சாலை

மாநில பஸ் போக்குவரத்தில் தலைசிறந்துவிளங்கும் டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண் சன்ஸ் பஸ்களுக்கும் லாரிகளுக்கும் தேவையான ரிம்களை உற்பத்தி செய்வதற்கான ஒரு தொழிற்சாலை சென்னைக்கு அருகிலுள்ள கொரட்டூரில் அமைக்கப்படும் என்றும், டன்லப் கம்பெனியும், சுந்தரம் அய்யங்கார் அண் சன்சும் கூட்டாகச் சேர்ந்து இதை நடத்துவர் என்றும், இதில் ஆண்டு ஒன்றுக்கு 2 லட்ம் சக்கரங்கள் தயாரிக்கப்படும் ர றும் சொல்லப்படுகிறது.

## சேலத்தில் அலுமினியத் தொழிற்சாலை

சேலத்தில் அலுமினியத் தொழிற்சாலை அமைப்பதற்ன சாத்தியக் கூறுகளை ஆராய்து இத்தாலிய நிபுணர்கள் கொத்துள்ள அறிக்கை ரகசியமக வைக்கப்பட்டிருக்கிறது என்றும், அலுமினியத் தொழிற்சலை அமைப்பதற்கான எல்லா நடடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன என்றும் தொலமைச்சர் திரு. ஆர். வெங்கடமன் குறிப்பிட்டிருக்கிறார்.

## கிராம மின்சார சப்ளை

சென்னை மின்சார போர்ர் 1960-61-வது ஆண்டு றி அறிக்கை மார்ச் 12ந் தேதி ச சபையில் சமர்ப்பிக்கப்பட்டது. அப்போது இவ்வாண்டில் ர சார விநியோகத்திற்கு எவ்க் கட்டுப்பாடு முறையும் இருக்க என்றும், கிராமங்களுக்கு சார சப்ளை செய்வதில் இந் முழுவதிலும் சென்னை மாநி முதன்மை வகிக்கிறது என் அறிவிக்கப்பட்டது.

## பத்து லட்சம் பேருக்கு வேலை வாய்ப்பு

### தொழிலமைச்சர் விளக்கம்

சென்னை அரசாங்கத்ன் புதிய வரவுசெலவுத் திட்டத்ள மீது நடைபெற்ற விவாதத்தில் மாநிலத் தொழிலமைச்சர் திரு. ஆர். வெங்கட்ராமன் பேசுகையில் இரண்டாவது திட்ட காலத்தில் பத்துலட்சம் பேருக்கு வேலை வாய்ப்புகள் கிடைக்கும் என்று திட்டமிட்டது நிறைவேறும் என்று குறிப்பிட்டார்.

அமைச்சர் மேலும் குறிப்பிட்டதாவது:-

சென்னை மாநிலத்தில் வேலை வாய்ப்புகளை அதிகரிக்கும் மு யில்தான் என் தொடர்பு இலாகாக்கள் இயங்குகின் இதனால், 'வேலையில்லாமை' றிலுமே நீங்கிவிட்டதாக சொல்லவில்லை. சுதந்திரம்பெ பத்தே அண்டுகளில் எல் கும் எல்லாம் நடந்துவிடும் என்று கருதமுடியுமா?

அரசாங்க அலுவல்களில் 1959-ஆம் ஆண்டு மார்ச் மாத இறுதியில் ஐந்துலட்சத்து இருபதாயிரம் பேர்கள் வேலையில் இருந்தனர். இரண்டாவது திட்ட முதல் மூன்றாண்டுகளில் இது 45 சதவிகிதம் அதிகரித்திருக்கிறது. திட்ட முடிவில் ஒரு லட்சம் பேர்களுக்கு வேலை வாய்ப்பு இருக்கும்.

அரசாங்கமே ஏழு தொழில் சாலைகளில் ஐம்பது லட்சம் ரூபா முதலீடுசெய்தனர். ஏழு கோடி ரூபா மூலதனம் சேர்த்து இத் தொழிற்சாலைகள் வந்துள்ளன. இவற்றில் பதினாறாயிரம் பேர்களுக்கு வேலை கிடைக்கிறது.

## அருள் வாக்கு

துயரத்தை ஏற்றுச் சமாளிக்கும் இயல்புடையவன் துயரத்தால் துயர்ப்படுவதில்லை.

## பேராசியருக்குப் பாராட்டு

சென்னைப் பல்கலைக்கழக இந்தி மொழிப் பிரிவுத் தலைவர் டாக்டர் சங்கரராஜு நாயுடு அவர்களுக்கு பிப்ரவரி 27-ல் சென்னை உட்லண்ஸில் கம்பன் மன்றத்தார் பாராட்டு அளித்தனர். பேராசிரியர் ரா. பி. சேதுபிள்ளை தலைமை தாங்கி இந்தி மொழிப் புலமை பெற்று விளங்கும் சங்கராஜு தமிழ் இந்தி இரு மொழி இலக்கிய ஒப்புநோக்கு ஆய்வுத் துறையில்அரும்பணிபுரியும் பெற்றியினை அறிமுகப்படுத்தினார்கம்பர் துளசி ஒப்புநோக்கு ஆராய்ச்சித் திறனைப் பாராட்டினார். அத்துடன் திருக்குறளை இந்தியில் மொழிபெயர்ப்புச் செய்திருப்பதும் தாய் மொழியாகிய தமிழ் மொழியின் மாண்பை இந்தியாளர் உணர்ந்து போற்றுமாறு செய்துள்ள அரும்பணியாகும் என்றார். திருவாளர்கள் மீ.ப. சோமசுந்தரம், கா. அப்பாதுரை, எ. வி. பால் நாடார், எம். வி. வேணுகோபால்பிள்ளை ஆகியோர் பராட்டுரை வழங்கினர். பல அறிஞர்களின் வாழ்த்துச்செய்திகள் வாசிக்கப்பட்டன. திரு. சங்கராஜு நாயுடு தமக்களிக்கப்பட்ட வாழ்த்துரைக்கும் பாராட்டுக்கும் நன்றிதெரிவித்தார்.

கம்பன் மன்றச் செயலாளர் ஜி. சங்கர ராஜுலு நன்றி நவில





## கரூர் டி. மு. கோர்ட்
O. P. 4/60

மைனர் காமாட்சி என்கிற தனலக்ஷ்மி by next friend K. ஆண்டியப்ப செட்டியார்

—மனுதார்

Nil —எதிர் மனுதார்

ஷை மனுதார் காலஞ்சென்ற M. வைரப்பெருமாளுக்கு சேர வேண்டிய இன்ஷூரன்ஸ் தொகை ரூ 500/-க்கு தனக்கு வார்சு சர்டிபிகேட் கிடைக்க வேண்டுமாய் செய்திருக்கும் மனு 25-3-60-ம் தேதி வாய்தா போடப்பட்டிருக்கிறது. அதற்கு ஆக்ஷேபணையுள்ளவர்கள் ஷை தேதி காலை 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

K. V. கஸ்தூரி
மனுதார் அட்வகேட்

2 | 3525 | 293

## கரூர் டி. மு. கோர்ட்டு
S. C. 911/59

சேசவியம்மாள் —வாதி
சங்கன் முத்திரியர் —பிரதிவாதி

புரோ நோட்டுப்படி ரூ. 257–74 n.P.-யும் பின்வட்டியும் சிலவு தொகையும் கிடைக்க வேண்டுமாய் செய்திருக்கும் இந்த தாவா 31-3-60-ம் தேதி வாய்தா போடப்பட்டிருக்கிறது. அன்று பிரதிவாதி ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ளாவிடில் exparte யாக தீர்மானிக்கப்படும்.

M.S. நாராயணசாமி அய்யர்
Advocate for Plaintiff

3 | 3526 | 294

## திருவையாறு டி. மு. கோர்ட்
S. C. 471/59

பச்சை மூப்பனர் —வாதி

1. ராம மூப்பனர் 2. மைனர் பாலசுப்ரமணியன் 3. அமராவதி அம்மாள் —பிரதிவாதிகள்

ஷை மைனர் 2-ம் பிரதிவாதிக்கு அட்வகேட் ஸ்ரீ எஸ். கணேசன் —கார்டியன்

ஷை நெம்பர் வாதிக்கு காசிநாத மூப்பனர் ரூ. 510-க்கு எழுதிக் கொடுத்த பிராமிசரி நோட்டுப்படி தொகை கிடைக்க வாதியால் தாவா செய்யப்பட்டு 21-3-60-ல் ஈரங்கி போடப்பட்டுள்ளது. 3-ம் பிரதிவாதிக்கு ஆக்ஷேபணை இருந்தால் கோர்டில் தெரிவித்துக் கொள்ளவும்.

V. கிருஷ்ணமூர்த்தி
வாதி வக்கீல்.

3529 | 2...

## சிதம்பரம் டி. மு. கோ.
O. P. 12/1960.

1. நாகலக்ஷிமியம்மாள் 2. ஜெயம்மாள் 3. ருமதாஸ் ரெட்டியார் 4. பாலசந்திர ரெட்டியார்.

—மனுதார்கள்.

எதிர் மனுதார் :— Nil

The Oriental Government security Life Assurance Company Limited-ல் வரவேண்டியதாக உள்ள ரூ. 2525/-ம் இறந்த முத்துகிருஷ்ண ரெட்டியாருக்கு வார்சுகளான மனுதார்கள் பெறவேண்டி வார்சு சர்ட்டிபிகேட்டுக்கு மனுகொடுத்து நோட்டீசு யீரங்கி 30—3—1960 வைக்கப்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனை இருந்தால் அன்று பகல் 10 மணிக்கு ஆஜராகி தெரிவித்துக் கொள்ளவும் தவறினல் ஒருதலை பக்ஷமாக தீர்மானிக்கப்படும்.

S. Arunachala Iyer
மனுதார்கள் அட்வகேட்.

1 | 3524 | 292

## சிதம்பரம் டி. மு. கோ.
O. P. 10/60

சின்னப்பொன்னு அம்மாள் —மனுதாரி
S. சம்பந்தம் பிள்ளை —எதிர்மனுதார்

ஷை நெம்பரில் மனுதாரி புருஷன் காலமான O. S. தெய்வசிகாமணி பிள்ளைக்கு I. C. பாங்கு டிபாசிட்டிலிருக்கும் தொகை ரூ. 588-84 n.P. வார்சு முறைமையில் வசூலிக்க சர்டிபிகேட் பெற மனு கொடுத்து 26—3—60-ல் நோட்டீசு ஈரங்கி வைக்கப்பட்டிருக்கிறது ஆக்ஷேபணை உள்ளவர்கள் தெரிவித்துக்கொள்ளலாம்.

M. S. விஸ்வநாதய்யர்
மனுதாரி வக்கீல்

4 | 3527 | 295

## புதுக்கோட்டை டி. மு. கோர்ட்
S. C. 117/60

தாஜ்மஹால் புகையிலை கம்பெனி —வாதி
K. S. தண்டபாணி செட்டியார் —பிரதிவாதி

ஷை நெம்பர் பிரதிவாதிக்கு தெரிவிப்பதாவது:-

ஷை நெம்பர் வாதி தம் பேரில் ரூ. 37–75-க்கு பிருது போட்டு 31-3-60-ந் தேதி டயம் ஏற்பட்டிருப்பதால், ஆக்ஷேபணை இருந்தால் அன்று கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

S. A. காதிர் சாயபு
அட்வகேட்

5 | 3528 | 296

## உலக மொழிகளும் பேசுவோரும்

உலக மொழிகளில் முக்கியமான சிலவற்றைப் பேசுகிற மக்களின் எண்ணிக்கை பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| சீனம் | 50 | கோடி |
| ஆங்கிலம் | 27.5 | ,, |
| ரஷ்யன் | 20 | ,, |
| இந்துஸ்தானி, உருது, இந்தி, பஞ்சாபி | 15 | ,, |
| ஸ்பானிஸ் | 13.5 | ,, |
| ஜெர்மன் | 12 | ,, |
| ஜப்பான் | 9.5 | ,, |
| வங்காளம் | 7.5 | ,, |
| அராபிக் | 7.25 | ,, |
| ஃபிரஞ்சு | 7 | ,, |
| உருது | 5 | ,, |

## கதர் உற்பத்தியும் விற்பனையும்

சென்னை அரசாங்க காதி இலாகாவைச் சேர்ந்த பல்வேறு காதிக் கூடங்களில் 1960 பிப்ரவரி மாதத்தில் கதர் உற்பத்தியின் அளவும் விற்பனையும் பின்வருமாறு:

| | |
|---|---|
| உற்பத்தி: | 4,22,171 கிஜம். |
| மதிப்பு: | 10,90,645 ரூபா |
| விற்பனை: | 2,96,498 கிஜம் |
| மதிப்பு: | 8,31,197 ரூபா |









## டெலிபோன் கட்டணம் திருத்தப்பட்டது

இந்தியா முழுவதும் டெலிபோன் கட்டணம் திருத்தி அமைக்கப்பட இருக்கிற தென்றும், அதன் பயனை ஏப்ரல் முதல் தேதியிலிருந்து திருத்தி அமைக்கப்பட்ட கட்டண விகிதம் அமுலுக்கு வரலாம் என்றும் தெரிகிறது.

தொலை தூரங்களுக்குப் பேசும் 'ட்ரங்கால்' கட்டண விகிதத்தில் எத்தகைய மாறுதலும் இல்லை. டெலிபோன் வைத்துக் கொண்டிருப்பவர்கள் இதுவரை ஆண்டுக் கட்டணமாக 120-லிருந்து 168 ரூபா வரை பல்வேறு விகிதத்தில் செலுத்தி வந்தனர். இப்போது இந்தியா முழுவதுக்குமே அது 240 ரூபா என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. உள்ளூரில் பேச 15 புதுக்காசுகளாக உயர்த்தப்படும். இந்தக் கட்டண மாற்றத்தால் அரசாங்கத்துக்கு 2 கோடி ரூபாய் அதிக வருமானம் கிடைக்கும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

# மறைந்த மாநகர்

ஆமதாபாத்திற்கு அருகே 48 மைலில் லோத்தல் என்னும் இடத்தில் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையினர் மேற்கொண்டிருந்த பழம் பொருள் கண்டுபிடிப்பு வேலைகள் பூர்த்தியாகி விட்டன.

கடந்த 28 ஆண்டுகளில் இத்துறையினர் மேற்கொண்ட வேலையில் இதுவே மிகப்பெரியதாகும்.

மொகஞ்சதாரோ, ஹாரப்பா ஆகிய புதைந்த நகரங்களைப் போன்று இவ்விடத்திலும் மிகப் பெரிய புதையுண்ட நகரம் ஒன்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இதுவும் ஹாரப்பா நாகரிகத்தையே காட்டுகிறது.

இந்திய சரித்திரத்தின் இருண்ட பகுதிகளை விளக்கும் எண்ணற்ற தொல்பொருள்கள் இங்கு கிடைத்துள்ளன. கண்டெடுக்கப்பட்ட சுமார் 17,000 பண்டைப் பொருள்கள் பற்றி குழுத் தலைவர் திரு. எஸ். ஆர். ராவ் அறிக்கை தயார் செய்கிறார்.

கிறிஸ்து பிறப்பதற்கு 1500 ஆண்டுகளுக்கு முன்பே முடிவுற்றதாகக் கருதப்பட்ட ஹாரப்பா, மொகஞ்சதாரோ நாகரிகம் மேலும் 500 ஆண்டுகள் செழிப்புற்றிருந்ததாக இவ்விடத்தில் புதையுண்ட நகரம் தெரிவிக்கிறது.

நகர அமைப்பு ஆச்சரியப்படும்படியான ஒழுங்குடன் காணப்படுகிறது. வீதியின் இரு மருங்கிலும் வரிசையாகக் கட்டப்பட்ட வீடுகளையுடைய நாலு தெருக்கள் கண்டுபிடிக்கப்பட்டன. குளிக்கும் அறை, பூமிக்கடியில் செல்லும் குழாய்ச் சாக்கடை அமைப்பு ஆகியவையும் தெரிந்தன.

சமீபத்தில் கண்டுபிடிக்கப்பட்ட துறைமுகப் பகுதியானது பன்னெடுங்காலத்திற்கு முன்பே மேற்குக் கரையில் மக்கள் கடல் போக்கு வரத்து மேற்கொண்டிருந்த சாதனையைக் காட்டுகிறது.

செங்கல் சுவர் அமைப்பு, மரத்தைக் குடைந்து அமைத்த வாய்க்கால் ஆகியவையும் காணப்படுகின்றன. இங்கு வாழ்ந்த மக்கள் நெருப்பை வணங்கி வந்ததாகவும் தெரிகிறதாம். இறந்த உடல்களைப் புதைக்கும் வழக்கமே இருந்து வந்திருக்கிறது. ஜோடியாக உடல்கள் புதைக்கப்பட்டிருப்பதைக் கண்ணுறும்போது சதி என்று கூறப்படும் உடன் கட்டை ஏறும் பழக்கம் இருந்திருக்குமோ என்று தோன்றுகிறது. இதன்படி கணவன் இறந்தால் மனைவியும் உடன் புதைக்கப்பட்டிருக்க வேண்டும்.

மாக்கல், ஓடு ஆகியவற்றினால் செய்யப்பட்ட வேலைப்பாடமைந்த சுமார் 200 முத்திரைகளும் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன. இவை ஹாரப்பா, மொகஞ்சதாரோவில் காணப் பட்டவை போன்றே தோன்றுகின்றன.



## தமிழ் நாடு காங்கிரஸ் காரியக் கமிட்டி

த. நா. காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் மார்ச் 6-ந் தேதி காஞ்சிபுரத்தில் நடைபெற்றது. கூட்டத்திற்கு த. நா. கா. கமிட்டித்தலைவர் திரு. ஓ. வி. அளகேசன் தலைமை வகித்தார்.

சென்னை மாநில முதலமைச்சர் காமராஜ் அவர்களும் வேறு பல அமைச்சர்கள், எம். எல். ஏ, க்கள் ஆகியோரும் இதர பிரமுகர்களும் வந்திருந்தனர்.

1960-ம் ஆண்டில் பத்துலட்சம் புதிய அங்கத்தினர்கள் சேர்க்கவேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது.

ஒவ்வொரு மாவட்டத்திலும் மக்கட்தொகை அடிப்படையில் எவ்வளவு அங்கத்தினர் சேர்க்க வேண்டும் என்று கமிட்டி நிர்ணயித்துள்ளது. திருச்சிக்கும் புதுக்கோட்டைக்கும் பின்வருமாறு:

திருச்சி: 82500
புதுக்கோட்டை : 16000

## சுகாதார துணை நிலையம்

லால்குடிக்கு அருகில் உள்ள கூகூர் கிராமத்தில் சுகாதார துணை நிலையத் திறப்பு விழா திரு. லாசர் உடையார் எம்.எல்.ஏ. தலைமையில் நடைபெற்றது.

ரூ. 4800 செலவில் கட்டப் பட்ட இந்த நிலையத்தை சென்னை மாநில மின்சார அமைச்சர் திரு. ராமையா திறந்துவைத்தார்.

## விசுவகர்ம முன்னேற்றச் சங்கம்

திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த பொன்னமராவதி புதுப்பட்டி விசுவகர்ம முன்னேற்றச சங்கத் துவக்க விழா திரு. சாமி பழனியப்பன் தலைமையில் நடைபெற்றது. தலைவர் பேசுகையில் இன ஒற்றுமையை வலியுறுத்திச் சங்கத்தின் அவசியத்தையும் அதன் நலன்களையும் எடுத்துக் கூறினார்.

திரு. உ. வே. சாமிநாத ஆச்சாரி சங்கப் பொறுப்பாளராகவும், திரு. மா. தங்கராசு ஆச்சாரி தலைவராகவும், திரு. மு. பழனியப்ப ஆச்சாரி துணைத்தலைவராகவும், திரு. சு. பெருமாள் ஆச்சாரி பொருளாளராகவும் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். எழுவர் செயற்குழு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றனர். மேலும் தேவையான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கச் செயற் குழுவுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.



Edited Printed and Published by Thiruloka Sitharam for the Shivaji Private Limited., at S. N. Printers Tiruchy-2.